Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

காலம்

காலம் ஒன்றும் மாற வில்லை. அது சுற்றிக் கொண்டுதான் இருக் கிறது. மனிதன்தான் மாறிப்போகிறான்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

உரிமை

என் கருத்தை மறுக்க உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் என் அபிப்பிராயத்தை வெளியிட எனக்கும் உரிமையுண்டு.

-தந்தை பெரியார்

மலர் :7 சென்னை 15 - 4 - 83 வெள்ளி வெளியூர் 16 - 4 - 83 சனி இதழ்: 176

அமைச்சர் திருநாவுக்கரசு புகார்:

# தொழில்துறையில் தமிழகம் புறக்கணிப்பு

**சென்னை, ஏப். 15. தொழில்களைத் தொடங்குவதில் தமிழகத்தை மத்திய அரசு புறக்கணிக்கும் விவரத்தை அமைச்சர் திருநாவுக்கரசு வெளியிட்டார்.**

தொழில் கொள்கையும் திட்டங்களும் பற்றிய கொள்கை விளக்கக் குறிப்பை அமைச்சர் திருநாவுக்கரசு சட்டப் பேரவையில் தாக்கல் செய்தார்.

அதில் அமைச்சர் திருநாவுக்கரசு கூறியிருக்கும் முக்கிய விவரங்கள் வருமாறு:—

தமிழ்நாட்டில் 1976—77ல் 8570 தொழில்கள் இருந்தன. இது 1980—81ல் 10,964 ஆக உயர்ந்தது.

பயன்படுத்தப்பட்ட மூலதனமும் ரூ. 2007 கோடியில் இருந்து ரூ 4292 கோடியாக உயர்ந்துள்ளது. இவைகளில் பணியாற்றி வருபவர்களது எண்ணிக்கை 6.98 லட்சத்தில் இருந்து 8.78 லட்சமாக உயர்ந்தது.

## உற்பத்தி அளவு உயர்வு

அதுபோல உற்பத்தி அளவு ரூ 648.6 கோடியில் இருந்து ரூ. 1229.2 கோடியாக உயர்ந்தது.

1982—ஆம் ஆண்டில் 41 தொழில்களுக்கு மத்திய அரசு அனுமதிக் கடிதங்களை வழங்கியது.

இதற்கு முதலீடுகள் ரூ. 99.4 கோடி தேவைப்படும் இவை முடிக்கப்பட்டால் 8400 பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும்.

82—83ம் ஆண்டில் தமிழ்நாடு தொழில் முதலீட்டு நிறுவனம் ரூ. 50 கோடி அளவிற்கும் சிறு தொழில் மேம்பாட்டுக் கழகம் ரூ. 25 கோடி அளவிற்கும் கடன் வழங்கும்.

பின்தங்கிய தொழில் பகுதிகளுக்கு 82—83ல் ரூ. 3.30 கோடி வழங்கப்பட்டது.

மின் அணுக் கருவிகள், மோட்டார் வண்டி துணைப்பொருட்கள், மருந்துகள் மருந்துப் பொருட்கள் தொழில்கள் மேலும் வளர்ச்சியுற நல்ல வாய்ப்புகள் உள்ளன.

82-83-ம் ஆண்டில் அரசு பொதுத் துறையில் சுமார், ரூ. 19.71 கோடி முதலீடு செய்தது.

83—84ம் ஆண்டில் சுமார் ரூ.23கோடி முதலீடு இருக்கும்.

## மைய அரசின் பாரபட்சம்

நம் மாநிலத்தில் மத்திய அரசுத்துறை நிறுவனங்களை அமைக்குமாறு தமிழக அரசு மத்திய அரசைக் கேட்டுக் கொள்கிறது.

எனினும் மத்திய அரசிடம் இருந்து இதுவரை சாதகமான பதில் கிடைக்கவில்லை.

எடுத்துக்காட்டாக போதுமான அளவு அடிப்படை வசதிகள் நிறைந்துள்ள உதகமண்டலத்தில் வண்ண நிழற்படச் சுருள் தயாரிப்பு திட்டத்தை தொடங்கலாம் என்று தமிழக அரசு தெரிவித்தது.

ஆனால் மத்திய அரசு வேறுவிதமாக தீர்மானித்தது.

இருப்பினும் இனிநிறைவேற்ற இருக்கிற மத்திய அரசுத்துறை திட்டங்கள் இல இம்மாநிலத்தில் நிறைவேற்றப்படும்என்று எதிர்பார்க்கப்படுகிறது.

புதிய திட்டங்கள் உருவாகும் போதெல்லாம் புதிய திட்டங்களை இம் மாநிலத்தில் அமைக்குமாறு மாநில அரசு மத்திய அரசினைக் கேட்டுக் கொள்கிறது.

எனினும், இம்மாநிலத்தில் மத்திய அரசு நிறுவனங்கள் 11 மட்டுமே உள்ளன என்றும் அவையனைத்தும் 1967—ஆம் ஆண்டிற்கு முன்னரே நிறுவப்பட்டவை என்றும் அறிகிறோம்.

1967 ஆம் ஆண்டிற்குப் பின்னர், மத்திய அரசின் நடுத்தர அளவிலான இரு நிறுவனங்கள் மட்டுமே இம்மாநிலத்தில் தொடங்கப்பட்டன.

இவற்றில் ஒன்று தொழில் வளர்ச்சியில் பிற்பட்ட பகுதியாகிய இராணிப் பேட்டையில ரூ. 32 கோடி முதலீட்டுடன் 1980-81 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்டின் துணை சாதனங்கள் தயாரிக்கும் நிறுவனமாகும்.

மற்றொன்று சேலத்தில் ரூ. 167 கோடி முதலீட்டில் தொடங்கப்பட்ட துருப்பிடிக்காத உருக்குப் பொருள்களைத் தயாரிக்கும் ஆலையாகும். எனவே, தமிழ் நாட்டின் தற்போதைய நிலையை மாற்றியமைக்க மத்திய அரசு தமிழ் நாட்டில் அதிக அளவு முதலீடு செய்து திட்டங்களை நிறைவேற்ற வேண்டுமென்பது தெளிவாகிறது.

## டிட்கோ சார்பில் 4 தொழிற்சாலைகள்

டிட்கோ சார்பில் ரூ. 34.94 கோடி செலவில் 4 தொழிற்சாலைகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

திட்ட நிலையில் 3 உள்ளன. இதன் மூலதனச் செலவு ரூ. 32.53 கோடி.

கூட்டுத் துறை மூலம் 9 தொழிற்சாலைகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

திட்டமிடும் நிலையில் 11 உள்ளன. இதன் மூலதனச் செலவு ரூ. 192.37 கோடியாகும்.

அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யும் நோக்கத்துடன் அமெரிக்கநாட்டு பிரவுன் அண்டு கம்பெனியின் உடனுழைப்புடன் ஷூ தயாரிக்க ஷூ பேப்ரிக்ஸ்லிமிடெட் தொடங்கப்பட்டுள்ளது. இது உற்பத்தியை விரைவில தொடங்கும்.

மேலும் 4 தொழிற் பிரிவுகளும் 83—84ல் உற்பத்தியை தொடங்கும்.

## மேலும் 7500 பேருக்குகூடுதல் வேலை வாய்ப்பு

டிட்கோ திட்டங்களால் இதுவரை 10 ஆயிரம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைத்துள்ளது, இதனிடம் உள்ள திட்டங்கள் செயல்பட்டால் மேலும் 7500 பேருக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும்.

தமிழ்நாடு சிமெண்ட் நிறுவனம் மதுரை மாவட்டம் பாளையத்தில் ஒரு சிமெண்ட் ஆலை, ஆஸ்பெஸ்டாஸ் அழுத்தக் குழாய் திட்டம் ஆகிய இரண்டு திட்டங்களை மேற்கொள்ள உத்தேசித்துள்ளது.

83-84ம் ஆண்டில் 3.5 லட்சம் டன் சிமெண்டை இறக்குமதி செய்ய தமிழ்நாடு சிமெண்ட் நிறுவனம் திட்டமிட்டுள்ளது. பாளையத்தில் ஆண்டுக்கு 4 லட்சம் சிமெண்ட் உற்பத்தி திறன் கொண்ட ஆலை அமைக்க மைய அரசு இன்னும் ஒப்புதல் அளிக்கவில்லை.

தமிழ் நாடு தொழில் முன்னேற்ற நிறுவனம் 82 டிசம்பர் வரை ரூ. 116 கோடி அளவுக்கு நிதி உதவி 62 ஆயிரம் பேருக்கு நேரடி வேலை வாய்ப்பு அளித்துள்ளது,

## 5 இடங்களில் தொழிற்பேட்டை

கும்மிடிப்பூண்டி, தூத்துக்குடி, கடலூர், புதுக்கோட்டை, மானாமதுரை ஆகிய 5 இடங்களில் தொழிற் பேட்டைகளை அமைக்க முயற்சி மேற்கொண்டுள்ளது.

மீனம்பாக்கம் அருகில் தடையிலா வணிக மண்டலம்ஒன்றை தொடங்குமாறு மத்திய அரசை தமிழக அரசு கேட்டுக் கொண்டுள்ளது. இதற்காக மீனம்பாக்கத்

(2-பக்கம் பார்க்க)

குற்றம் சாட்டுவோருக்கு

## பேரவைதலைவர் கோரிக்கை

சென்னை, ஏப். 15— முத்து தேவன்பட்டி, பினாமி நிலம் பற்றிய தனது புகாருக்கு அமைச்சர் குழந்தைவேலு கொடுத்த ஆதாரம் ஏற்கக் கூடியதாக இல்லை என்று பேரவைததலைவர் ராசாராம் இன்று கூறினார்.

மேலும் அவர் கூறியதாவது:-

தனிப்பட்ட முறையில் குற்றம் சாட்டும் போது அதற்கான ஆதாரங்கள் இரண்டு நாட்களுக்கு முன்னதாகவே பேரவைத் தலைவருக்கு எழுத்துமூலம் கொடுத்து அந்த குற்றச்சாட்டிற்கு மேலெழுந்த வாரியாக ஆதாரங்கள் இருப்பதாக பேரவைத் தலைவர் ஏற்று அனுமதித்தால் அன்றி அமமாதரியான குற்றச்சாட்டுகள் பேரவையில கண்டிப்பாக கூறக் கூடாது.

யார் மீது குற்றம் சாட்டப்படுகிறதோ அந்த அமைச்சருக்கு அல்லது உறுப்பினருக்கு குற்றச்சாட்டின் நகலினை எழுத்து மூலமாக உறுப்பினரால் முன் தகவல் கொடுக்கப்படவேண்டும். அரசாங்க அலுவல் மற்றும்நிர்வாககுறைபாடுகள் பற்றிய குற்றச்சாட்டுகள் கூறுகின்ற உரிமை எந்த விதத்திலும் பாதிக்காது.

இவ்வாறு பேரவைத் தலைவர் கூறினார்.

தமிழகமெங்கும் நடந்த விழா:

# பல லட்சம் ஏழைகள் இலவசஉடைபெற்றனர்

**சென்னை, ஏப். 15. தமிழ் புத்தாண்டு தினத்தையொட்டி நிலமற்ற ஏழை விவசாயத்தொழிலாளர்களுக்கு இலவச வேட்டி சேலை வழங்கும் விழா நேற்று தமிழகமெங்கும் நடைபெற்றது. இலவச வேட்டி சேலைகளை அமைச்சர்கள் வழங்கினார்கள்.**

தமிழகத்தில் வறட்சியால்பாதிக்கப்பட்டஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கு புத்தாண்டு தினத்தையொட்டி இலவசமாக வேட்டி சேலைகளை வழங்க அரசு முடிவு செய்திருந்தது. இதற்காக நெசவாளர்களிடம்தேங்கியிருந்த 9½ கோடி ரூபாய் மதிப்புள்ள துணிகளை அரசு வாங்கி 60 லட்சம் பேருக்கு வழங்க ஏற்பாடு செய்திருந்தது.

இதற்காக பல நகரங்களில் நடந்த விழாக்களில் அமைச்சர்கள் கலந்துகொண்டு வேட்டி சேலைகளை வழங்கினர்.

செங்கல்பட்டு மாவட்டத்தில் வில்லிவாக்கம் தொகுதியைச் சேர்ந்த நெற்குன்றம் கிராமத்தில் நிலமற்ற 572 ஏழை விவசாயததொழிலாளர்குடும்பங்களுக்கு அமைச்சர் கே.ஏ.கே. வேட்டி சேலைகளை வழங்கினார். கழக சட்டமன்ற உறுப்பினர் ஜே.சி.டி. பிரபாகரன் இந்த விழாவிற்கு தலைமை வகித்தார்.

## செங்கையில் 4000 பேருக்கு இலவச வேட்டி சேலை

இவ்விழாவில் கலந்து கொண்டு அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில் கூறியதாவது:—

ஆண்டுதோறும் தமிழர் திருநாளான பொங்கல்நாளில் முதியோர் உதவித்தொகை பெறுவோருக்கு வேட்டியும், சேலையும் வழங்கப்பட்டு வந்தது. அதே போல் இந்த புத்தாண்டில் நிலமற்ற ஏழை விவசாய குடும்பங்களுக்கு வேட்டி சேலை வழங்கப்பட்டுள்ளது. இது போன்ற சமூகப் பணிகளை அடக்கத்தோடு இந்த அரசு செய்து வருகிறது என்று குறிப்பிட்டார்.

இந்த விழாவில்சைதை கோட்ட வளர்ச்சி அதிகாரி ஏ. ராமதாஸ் சப்-கலெக்டர் ஜலால், ஊராட்சி ஆணையர் வி. ஜி. அந்தோணி ஆகியோர் கலந்து கொண்டனர்.

முன்னதாக நெற்குன்றத்தில் உள்ள அண்ணா சிலைக்கு அமைச்சர், கே. ஏ. கே. மாலை அணிவித்தார். புத்தாண்டு தினத்தையொட்டி செங்கல்பட்டு மாவட்டத்தில் மொத்தம் 4 ஆயிரம் பேருக்கு வேட்டி...சேலை இலவசமாக வழங்கப் பட்டது.

நெல்லை மாவட்டத்தில் 35 ஆயிரம் ஏழை ஆண்—பெண் விவசாயத் தொழிலாளர்களுக்கு வேட்டி சேலை வழங்கப் பட்டது.

### சேலத்தில்...

சேலம் மாவட்டத்தில் கொண்டப்பநாயக்கன் பட்டியில் சட்டமன்ற உறுப்பினர் ஆறுமுகம் தலைமையில் மாவட்ட கலெக்டர் வரதராஜுலு வேட்டி, சேலைகளை வழங்கினார். சேலம் மாவட்டத்தில் மொத்தம் 3½ லட்சம்பேருக்குஇலவச வேட்டி சேலைகள் வழங்கப்பட்டன.

### தர்மபுரியில்...

இதே போல் தர்மபுரி மாவட்டத்தில் நடந்த விழாவிற்கு அரங்கநாதன் எம். எல். ஏ. தலைமை வகித்தார், மாவட்ட கலெக்டர் இளங்கோவன் 1600 பேருக்கு வேட்டி சேலைகளை வழங்கினார்.

### தெ. ஆற்காடு

தென்னாற்காடுமாவட்டத்தில் கலெக்டர் கரியாலி 242 பேருக்கு வேட்டி சேலை வழங்கினார்.

### கோவை

கோவை மாவட்டத்தில் நடந்த இந்த விழாவிற்கு மாவட்ட கலெக்டர் பாஸ்கரதாஸ் தலைமை வகித்தார். அமைச்சர் அரங்கநாயகம் விழாவில் கலந்து கொண்டு இலவச வேட்டி சேலைகளை வழங்கினார்.

### பெரியார்

பெரியார் மாவட்டத்தில் மாவட்ட கலெக்டர்தியானேசுவரன் தலைமையில் வேட்டி சேலை வழங்கு விழா நடைபெற்றது. அமைச்சர் முத்துசாமி கலந்து கொண்டுஏழைவிவசாயத் தொழிலாளர் குடும்பங்களுக்கு வேட்டி சேலைகளை வழங்கினார்.

### நீலகிரி

நீலகிரி மாவட்டத்தில் கலைக்டர் ஆதிமூலம் வேட்டி சேலைகளை வழங்கினார்.

தஞ்சை மாவட்டத்தில் நடந்த விழாவிற்கு கலெக்டர் மெய்கண்டதேவன் தலைமை வகித்தார் இவ்விழாவில் அமைச்சர் கோமதி சீனிவாசன் 3089 பேருக்கு இலவச வேட்டி சேலைகளை வழங்கினார்.

# சென்னையில்குடிசைபகுதிமேம்பாட்டுக்கு ரூ. 50 லட்சம்

## முதன்முறையாக சென்னை மாநகராட்சி ஒதுக்கியது

**சென்னை, ஏப். 15 குடிசைப் பகுதிகள் முன்னேற்றத்திற்காக சென்னை மாநகராட்சி முதல் தடவையாக ரூ. 50 லட்சம் நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. இந்த நிதிஒதுக்கீடு மாநகராட்சி பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்டுள்ளது.**

சென்னை மாநகராட்சியின் வரவு செலவு திட்டத்தை தனி அதிகாரி கே. சந்திரசூடன் வெளியிட்டார்.

1983-84-ம் ஆண்டில் மாநகராட்சிநிறைவேற்ற இருக்கும் புதிய திட்டங்கள் பற்றி இதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அதன் விவரம் வருமாறு:—

சென்னை நகரில்உள்ள குடிசைப் பகுதிகளை சிறந்த முறையில் அபிவிருத்தி செய்ய மாநகராட்சி பட்ஜெட்டில் முதல் தடவையாக குறிப்பிட்டு ரூ.50 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்தத் தொகையில் ரூ. 20 லட்சம் குடிசைப் பகுதிகளில் ரோடுகள் அமைக்க செலவிடப்படும். குடிசைப் பகுதிகளில் விளக்குகள் அமைக்க ரூ. 10 லட்சம் செலவிடப்படும்.

குடிசைப் பகுதிகளில் குடிநீர் வசதி, மற்றும் கழிவுநீர் அகற்ற ரூ. 10 லட்சம் செலவிடப்படும். பொதுகழிவிடங்கள்கட்ட ரூ. 10 லட்சம் செலவிடப் படும்.

உலகவங்கி உதவியுடன் நகரில் கழிவுநீர் அகற்றும் திட்டம் சென்னை நகரில் வரும் ஆண்டில் செயல்படுத்தப்படும.

மழைக் காலங்களில்நீர் தேங்கும் இடங்களான அசோக்நகர். புளியந்தோப்பு, வியாசர்பாடி, ஆழ்வார்பேட்டை, மே. மாம்பலம் போன்ற 94 இடங்களில், மழை நீரை அருகில் ஓடும் நதிகளில் சேர்த்து விட்டுவிடும் பணிக்காக ரூ. 60 லட்சம் செலவிடப்படும்.

சென்னை கிரீம்ஸ் சாலையில் ரூ. 44 லட்சம செலவில அங்காடிகள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

### ரூ1.30கோடியில் சுரங்கப்பாதை

கூக்ஸ் ரோடில் ரூ. 33 லட்சம் செலவில் கட்டப்பட்டு வரும் பாலம் இந்த ஆண்டில் வேலைமுடியும் ரூ. 130 லட்சம் செலவில் கெங்குரெட்டி தெருவில் சுரங்கப்பாதை கட்டப்படும்.

மயிலைமுண்டககண்ணி அம்மன் கோயில் தெருவில் ரூ. 36 லட்சம் செலவில் புதிய பாலம் கட்டப் படும்.

பின்னி ரோடு பாலம், சித்ராதியேட்டர் பாலம், சிந்தாதிரிபேட்டைபாலம் எழும்பூர் பாலம் ஆகியவை பெரிதாக்கப்படும், ரோடுகளை சீரமைக்க ரூ, 260 லட்சம் செலவிடப்படும் ரூ. 31 லட்சம் செலவில் 67 தனியார் தெருக்கள் சீரமைக்கப்படும். சென்னை நகரில் கூடிய விரைவில் 2000 விளக்குகள் போடப்படும். இதில் 600க்கும் மேற்பட்ட விளக்குகள் குடிசை பகுதிகளில் போடப்படும்.

### துப்பரவு பணிகளுக்கு ரூ. 4.8 கோடி

இப்போது மலேரியா நோயை தடுப்பதற்காக சிந்தாதிரிப் பேட்டையில் 'தர்மோ போகிங்' புகை பாய்ச்சி கொசுக்களை ஒழிக்கவும், இதுபோல் மேலும் சென்னையில் பல இடங்களில் விரிவாக் கப்படும்.

சென்னை துப்புரவு பணியில் ஈடுபடும் லாரிகள் போதாததால்மேலும் 37 லாரிகள் வாங்கியுள்ளது. துப்புரவு பணிக்கு மட்டும் சுமார் ரூ. 4.86 கோடி செலவிடப்படுகிறது.

மாநகராட்சி குடும்ப கட்டுபாடு திட்டத்தின் கீழ் சென்ற ஆண்டுசுமார் 33200 பேர் பலனடைந்தார்கள், இந்த ஆண்டு அதைவிட அதிகமாக வடபழனி, சைதை, புளியந்தோப்பு. சஞ்சீவராயன்பேட்டை போன்ற இடங்களில் குடும்ப முகாம்கள் அமைத்து தீவிரப் படுத்தப்படும்.

சென்னை காமராஜ் சாலை போல், அண்ணா சாலையையும் துப்புரவு பகுதியாக அறிவிக்கப் படும்.

ஆயிரம்விளக்கு,கோட்டூர்புரம் போன்ற இடங்களில் சென்ற ஆண்டு உள்ளாட்சி துறை அமைச்சர் துவக்கி வைத்த பக்கெட்டில் குப்பை கொட்டும் திட்டமும் வெகு சிறப்பாக நடந்துள்ளது. இதுமேலும்விரிவுபடுத்தப் படும்.

இவ்வாறு பட்ஜெட்டில் கூறப்பட்டுள்ளது.

1983-84 ஆண்டிற்கான மாநகராட்சியின் வரவு செலவு திட்டததை தனி அதிகாரிகே,சந்திரசூடன் வெளியிட்டபோது ஆணையர் டி.எஸ். சிவபிரகாசம் துணை ஆணையாளர் ஜி. ராமகிருஷ்ணன மற்றும் உயர் அதிகாரிகளும கலந்து கொண்டனர்.

# உடல் நலம் பற்றி புரட்சித்தலைவர்

சென்னை, ஏப் 15— மேலவைக்கு வந்த போது முதல்வர் புரட்சித் தலைவரை நிருபர்கள் பேட்டி கண்டனர்.

நிருபர்கள் கேட்ட கேள்விகளுக்கு முதல்வர் பதிலளித்தார். அது பற்றியவிவரம் வருமாறு:

கேள்வி:— தங்களது உடல் நலம் எப்படி இருக்கிறது?

முதல்வர் புரட்சித்தலைவர்:— சுகத்துடன் இருக்கிறேன். இப்போது பரவாயில்லை.

கேள்வி: அமைச்சர் குழந்தைவேலு தனது பதவியை ராஜினாமா செய்து விட்டதாக கூறப்படுகிறதே?

முதல்வர்: அப்படி ஒரு கடிதம் என்னிடம் வரவில்லை.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் நிருபர்களிடம் தெரிவித்தார்.

ப. உ. ச. முன்னிலையில்

# கா. கா. தே. கா. வினர் 200 பேர் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, ஏப். 15- கா. கா. தே. கா. ஒன்றிய செயலாளர்கள் உட்பட 200 பேர் அந்தக் கட்சியிலிருந்துவிலகி பொதுச்செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

குமரி மாவட்டம் தக்கலை நகர கா. கா. தே.கா. செயலாளர்பாபு. லாசர் தக்கலை ஒன்றிய கா.கா.தே.கா. தலைவர் ஆர்தர், குளச்சல் நகர கா.கா. தே.கா. தலைவர் ஆண்ட்ரூஸ், குருந்தன்கோடு ஒன்றிய தலைவர், கனகசபாபதி, மாணவர் தலைவர் ரங்கசாமி ஆகியோர் உட்பட 200 பேர் கா.கா.தே.கா.விலிருந்து விலகி, சென்னை வந்து பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது குமரி மாவட்ட கழக செயலாளர் எப். எம். ராசரத்தினம் உடனிருந்தார்.

திருவை அண்ணாமலை என். வி. என். செல்வம், குமரி மாவட்ட துணை செயலாளர் நாகப்பன், எம். எம். கான், அழகை சிதம்பரம் ஆகியோர் உடன் இருந்தனர்.

கா. கா. தே. கா.விலிருந்து விலகிய அவர்கள் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

கொடி பிடிக்கும் தொண்டனே கொள்கை முடிவெடுப்பான் என்று முழக்கமிட்ட குமரி அனந்தன். திருச்செந்தூர் தேர்தலில் தொண்டனின் குரலுக்கு செவிகொடுக்காமல சூதுமதி படைத்தவர்களின் சொல்லைக் கேட்டு சூழ்ச்சி வலையில் சிக்கினார். வேட்பாளரை அறிவித்தார் நாங்களெல்லாம் கண்ணீர் வடித்தோம். கதறியழுதோம். திருச்செந்தூரில் வேட்பாளரை நிறுத்தியிருக்கும் முடிவை மறுபரிசீலனை செய்ய சொன்னோம். கால்களை பிடித்து கெஞ்சினோம். பலனில்லை

## சுயநலவாதி

குமரி அனந்தன் தன்னிச்சையாக, சுயநலத்திற்காக, எடுத்த முடிவால் தொண்டர்களின் நெஞ்சில்வேலைப்பாய்ச்சி விட்டார்.

வேட்பாளர் முத்து படுதோல்வி அடைந்தார். கட்சியின் மானம் காற்றிலே பறக்கிறது. இனியாவது தொண்டர்களை நம்புவார் என நினைத்தோம். தற்போது அவர் எடுத்து வரும் ஒவ்வொரு அரசியல் முடிவுகளும் எங்களைபோன்ற ஒவ்வொரு தொண்டனுக்கும் அந்தக் கட்சியிலிருந்து வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதை உறுதிப்படுத்துகிறது.

## நாட்டைக் காக்கும் தலைவர் புரட்சித்தலைவரே

கடுமையான வறட்சியிலும் மக்களைபாதுகாத்து வரும் மக்கள் தலைவர் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர் ஒருவரால்தான் நாட்டைக் கட்டிக் காக்க முடியும் என்பதைநம்பிஎங்களைப் போன்ற இளைஞர்கள் அனைவரும் கழகத்தில் இணைகிறோம்.

இவ்வாறு அறிக்கையில் கூறியுள்ளனர்.

## முதல்வரிடம் உடல் நலம் விசாரித்தார் கருணாநிதி

சென்னை, ஏப். 15— முதல்வர் புரட்சித் தலைவர் இன்று சட்டமன்றத்திற்கு வந்தபோது எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதி புரட்சித் தலைவரைப் பார்த்து உடல் நலம் விசாரித்தார். தற்போது பூரண சுகத்துடன் இருப்பதாக கருணாநிதியிடம் முதல்வர் புரட்சித் தலைவர் தெரிவித்தார்.

போலீஸ் ஐ ஜி.

## மோகன்தாஸ் மீதான உரிமை பிரச்சினை தள்ளுபடி

சென்னை, ஏப். 15— காவல்துறை ஐ ஜி. மோகன்தாஸ், மீது சட்டசபையில் தி.மு.க. உறுப்பினர் ரகுமான்கான் உரிமை மீறல் பிரச்சினை கொண்டு வந்து இருந்தார். அதன்மீது சபாநாயகர் ராஜாராம் இன்றுதீர்ப்பு அளித்தார். ஐ. ஜி. மோகன்தாஸ் மீதான புகாருக்கு ஆதாரம் இல்லை என்றும் எனவே உரிமை பிரச்சினையைத் தள்ளுபடி செய்வதாகவும் தன் தீர்ப்பில் கூறியுள்ளார்.

17-ந் தேதி விண்வெளி ஏவும்

## ரோகிணி ராக்கெட்: பார்க்க இந்திரா வருகிறார்

புதுடெல்லி, ஏப். 15— ரோகிணி ராக்கெட் விண்வெளிக்கு ஏவப்படுவதைப் பார்வையிட பிரதமர் இந்திரா வருகிறார்.

இந்த ராக்கெட் 17ந் தேதி ஸ்ரீ ஹரிகோட்டா விண்வெளி நிலையத்தில் இருந்து காலை 11 மணிக்கு ஏவப்படுகிறது.

இதைப் பார்வையிட பிரதமர் இந்திரா காந்தி 16ம்தேதிஇரவு சென்னை வருகிறார்.

இரவு சென்னையில் தங்குகிறார். 17ம் தேதி காலை ஹெலிகாப்டரால் ஸ்ரீஹரிகோட்டா செல்கிறார்.

## ஒரு லட்சம் பேர் கொண்ட தற்கொலைப் படை: அகாலிதளம் திரட்டுகிறது

அமிர்தசரஸ், ஏப்.15— பஞ்சாபில் அகாலிதளம் ஒருலட்சம் பேர் கொண்ட தற்கொலைப் படையை திரட்டதிட்டமிட்டுள்ளது.

இதன் முதல் பிரிவு படைக்கு லங்கோவால் உறுதிமொழி பிரமாணம் செய்து வைத்துள்ளார்.

அகாலி தளம் அழைத்தால் 31,500 தொண்டர்கள் எந்தவிதத்தியாகத்திற்கும் தயாராக உள்ளனர் என்றும் அவர் அறிவித்தார்.

இரண்டாவது பிரிவு ஏப்ரல்27ந்தேதியும், 3வது பிரிவு மே 12-ம் தேதியும் உறுதிமொழிப்பிரமாணம் ஏற்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## சென்னை டி. வி.யில் வண்ண ஒளிபரப்பை நிறுத்துவது தவறு

அமைச்சர் ஆர். எம். வீ. கருத்து

சென்னை, ஏப் 15- சென்னை தொலைக்காட்சியில் வண்ண ஒளிபரப்பை நிறுத்துவது தவறு என்று அமைச்சர் ஆர்.எம்.வீ, கருத்து தெரிவித்தார்.

இது குறித்து மத்திய அமைச்சருடன் தொடர்பு கொண்டு நடவடிக்கை எடுப்பதாக கூறினார்.

சட்ட மேலவையில் கேள்வி நேரம் முடிந்ததும் கழகக் கொறடா டாக்டர் இரா. சனார்த்தனம் ஒரு ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார்.

சென்னை தொலைக்காட்சிநிலையம் அண்மையில் வண்ணத்தில் சில நிகழ்ச்சிகளை ஒளிபரப்பியது.

இப்படி வண்ணத்தில் ஒளிபரப்பும் முயற்சிக்கு மத்தியஅரசு தடைவிதித்து அப்படிப்பட்ட வண்ண நிகழ்ச்சி ஒளிபரப்பக்கூடாது என்று உத்திரவிட்டு இருப்பதாகத் தெரிகிறது. இது பற்றி அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அதற்குப் பதில் அளித்து அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:-

சென்னை தொலைக்காட்சி நிலைய அதிகாரிகள் தங்களிடம் உள்ள சாதனங்களைக் கொண்டே திறமையுடன் இதில் செயல்பட்டனர். அதன் விளைவால் வண்ணத்தில் ஒளிப்பரப்பினார்கள். இதை நான் பாராட்டுகிறேன்.

இப்படி வண்ணத்தில் நிகழ்ச்சிகளை ஒளிபரப்புவதற்கு தொலைக்காட்சி மேலிடம் அனுமதி தரவில்லை என்று கூறி இப்போது வண்ணக் காட்சிகள் ஒளிபரப்புக் கூடாது என்று உத்திரவு வந்திருப்பதாகத் தெரிகிறது.

வண்ண ஒளிபரப்பு செய்ய நாம் வண்ண ஊர்தி கேட்டு இருக்கிறோம். அது பற்றி மத்திய அரசு தெளிவான பதிலை அளிக்கவில்லை.

அதே நேரத்தில் தங்களிடம் உள்ள சாதனங்களைக் கொண்டு இங்கே வண்ணஒளிபரப்பை செய்தால அதைதடுத்துநிறுத்துவது மிகவும் தவறானது.

இது குறித்து நான் சம்பந்தப்பட்ட மத்திய அமைச்சருடன் தொடர்பு கொண்டு நடவடிக்கை எடுக்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

## திருநாவுக்கரசு புகார்...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

திற்கருகில் நிலம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

வெளிநாடுகளில் வசிக்கும் 153 இந்தியர்கள் தமிழகத்தில் தொழில் தொடங்க ஆர்வம்காட்டியுள்ளனர்.

மத்திய முதலீட்டு உதவித்தொகை திட்டத்தின் கீழ் ஈட்டுத்தொகை ரூ. 19.87 கோடி பெறுவதில் மற்ற மாநிலங்களைவிட தமிழ்நாடே தொடர்ந்து முதன்மை நிலை வகித்து வருகிறது.

1982ல் உதவி அளிக்கப்பட்ட தொழில்களில் டிசம்பர் வரை ஏறத்தாழ 62 ஆயிரம் பேர்களுக்கு நேரடி வேலை வாய்ப்பு கிடைத்துள்ளது.

தமிழ்நாடு சர்க்கரை நிறுவனம் டிட்கோவுடன் கூட்டு முயற்சியாக ஒவ்வொரு ஆண்டும் 60 லட்சம் லிட்டர் சாராவி தயாரிக்கும் திறனுடைய இரண்டு வடிப்பகஙகளை அமைக்க திட்டமிட்டுள்ளது.

இவை முறையேதிருச்சி மாவட்டம் பெரம்பலூர் சர்க்கரை ஆலையிலும் சேலம் மாவட்ட மோகனூரில் உள்ள சேலம்கூட்டுறவு சர்க்கரை ஆலையிலும் அமைக்கப்படும்.

ரூ. 190 கோடி செலவில் புகலூர் காகித தொழிற்சாலை திட்டமிட்டபடி பணி நிறைவேறுகிறது.

எல்காட் நிறுவனர் டிஜிடல்மின்னணு கைக்கடிகாரம் 4 தொழில்களைத தொடங்க ஏற்பாடுகளை செய்து வருகிறது.

கனிமவள நிறுவனம் ரூ. 6.3 கோடி செலவில் மாக்னசைட் தாதுப் பொருளை கரிந்த மாகனசைட்டா தயாரிக்க சுழல் சூளைஒன்றை நிறுவ திட்டமிட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்துள்ளார்.

## கழக அரசில் சித்த மருத்துவ வளர்ச்சி: முதல்வர் பெருமிதம்

சென்னை, ஏப் 15- கழக அரசில் சிதத மருத்துவம் மகததான வளர்ச்சியடைந்திருப்பதாக முதல்வர் புரட்சித்தலைவர் கூறியுள்ளார்.

சித்த அறிவியல் மேம்பாட்டுக் குழு கட்டடத் திறப்பு விழா நேற்று அரும்பாக்கம் அறிஞர் அண்ணா மருத்துவமனை வளாகத்தில் நடந்தது இதையொட்டி முதல்வர் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார். அதை விழாவில் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் வாசித்தார். அந்த வாழ்த்துச் செய்தியில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியிருப்பதாவது:—

பண்டைத் தமிழகம் பல்வேறு துறைகளில் ஒப்பற்றுத் திகழ்ந்தது போல் மருத்துவத்துறையிலும் உலகத்திற்கு வழிகாட்டும் நிலையில் மிகச் சிறந்து விளங்கியது. சமயத்தைப் போற்றி வளர்த்து வந்த சித்தர்கள் மருத்துவத்திலும் சீரிய ஆராய்ச்சி செய்து ஏற்படுததக் கொடுத்தது தான் சித்த மருத்துவமாகும்.

மன்னர்களாலும், மக்களாலும் வளர்ககப்பட்டு வந்த இம் மருத்துவம இடையில் நலிவுற்றுக் கிடந்தது. அறிஞர் அண்ணா அவர்கள் பொறுப்பேற்ற பின்னர் தான் சித்த மருத்துவத்தின் பால் அரசின் முழுக்கவனம் செலுத்தப்பட்டு படிப்படியாக வளர்ச்சியுற்று வருகிறது.

## கழக அரசில்...

இந்த அரசு பொறுப்பேற்ற பின்னர் சித்த மருத்துவத்தை வளர்க்கவும், சித்த மருத்துவக் கல்வியை மேலும் பரப்பவும், சித்த மருத்துவத் தயாரிப்பு நிலையங்களை அதிகப்படுத்தவும் ஆராய்ச்சி நிலையங்களை ஏற்படுத்தவும், முறையாக திட்டமிடப்பட்டு அப்பணிகளைத் தீவிரப் படுத்துவதற்குப், சித்த மருத்துவப் புத்தக வெளியீட்டுப் பணியினை தொடர்ந்து நடத்தவும், சித்த மருத்துவ மேம்பாட்டுக் குழு ஒன்று முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விஸ்வநாதம் தலைமையில் அமைக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

## ஆரம்ப சுகாதார நிலையத்தில் சித்த மருத்துவம்

1980ம் ஆண்டுக்கு முன் சித்த மருததுவத்திற்காக ரூ. 82 லட்சம்வரை செலவிடப்பட்டு வந்தது. தற்போது ரூ. 243 லட்சம் வரை செலவிடப்படும் நிலைக்கு வளர்ந்துள்ளது. மாவட்ட தலைமை மருத்துவ மனைகளில் மட்டும் இயங்கி வந்த சித்த மருத்துவப் பிரிவுகள் தற்போது 210 ஆரம்ப சுகாதார நிலையங்களுக்கும் விரிவு படுத்தப்பட்டுள்ளது. மற்றும் நூலகம், பயிற்சி, பட்டப்படிப்பு, மருந்து உற்பத்தி நிலையங்கள் மருத்துவ ஆராய்ச்சி நிலையங்கள் மூலிகைப் பண்ணைவாரியம்எனபணி விரிவு படுத்தப்பட்டுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக இக்குழு திறம்பட இயங்குவதற்குப் புதிய கட்டிடம் கட்டப்பட்டுள்ளது.

## பாராட்டு பெறும் கி. ஆ. பெ.

வயது முதிர்ந்த நிலையிலும் சித்த மருத்துவ வளர்ச்சியில் தணியாத ஆர்வம் கொண்டு அரும்பாடுபட்டு வரும் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் இந்த வளர்ச்சியில் அரசுக்கு அளித்த ஆக்கப்பூர்வமான ஒத்துழைப்பு பாராட்டுதற்குரியது.

தமிழ்ப் புத்தாண்டு நாளில் நடைபெறும் இவ்விழா வெற்றி பெறவும் சித்த மருத்துவப் பணிகள் இப்புத்தாண்டில் பன்மடங்கு பெருகி, தமிழ் மக்களுக்குப் பயன்படவும் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தனது வாழ்ததுச் செய்தியில் கூறியுள்ளார்.

## 90 வயதுதொண்டுகிழவர் 40 வயதுபெண்ணை 11-வது மனைவியாக மணம்புரிகிறார்

கான்பூர், ஏப். 15— அவர் ஒரு பழுத்த தொண்டு கிழம். நூறு வயதை நெருங்க 10 ஆண்டுகள் உளளன.

அப்படிப்பட்ட அந்த 90 வயதுக்கிழவர் மணமகன் ஆகிறார்.

இவர் மணக்கப் போவது 40வயதுப் பெண்ணாம்.

இந்தப் பெண் இவரது 11—வது மனைவி. இந்த மணமகனின் 11—வது மனைவியாகப் போகும பெண்ணின் பெயர்பேகம் நிஷா, பந்தபூர் மாவட்டததைச் சேர்ந்தவர், மணமகன் பெயர் ஹாஜி அப்துல் சத்தார்கான்.

இவருக்கு முதல் மனைவி மூலம் 2 பிள்ளைகள் இருக்கின்றனர்.

இவர்கள் மூலம் இந்த தாத்தாவுக்குப் பேரன்கள் கொள்ளுப்பேரன்கள் எல்லாம் நிறைய இருக்கின்றனர்.

ஆனாலும் ஆசை யாரைவிட்டது? 90வயது கிழவரையும் பெண்ணாசை ஆட்டிப்படைக்கிறது.

90 வயது ஆனாலும் இளைஞர் போல மிடுக்கோடு இருக்கிறாராம்.

என்னய்யா இந்த வயதில் திருமணமா என்று கேட்டபோது தேவைப்பட்டால் இன்னும் ஒரு பெண்ணையும் மணப்பேன் என்று பட்டென்று பதில் அளித்தார் அந்தப் பெரியவர்.

## மின்வாரிய ஊழியர்கள் வேலை நிறுத்தத்துக்கு பீகார் அரசு தடை

பாட்னா, ஏப் 15. அத்தியாவசியப் பணிகள் பராமரிப்புச் சட்டத்தின் கீழ் மின்வாரிய ஊழியர்களின் காலவரம்பற்ற வேலை நிறுத்தத்திற்கு பீகார் மாநில அரசு தடை விதித்தது.

மீறி வேலை நிறுத்தம் செய்பவர்களுக்கு குறைந்தபட்சம் ஒரு ஆண்டும் அதிகபட்சம் இரண்டு ஆண்டுகளும் தண்டனை விதிக்கப்படும். 2 ஆயிரம ரூபாய்வரை அபராதமும் விதிககப்படும். சிறைதண்டனையும் அபராதமும் விதிப்பதற்கும சட்டத்தில் இடமிருக்கிறது.

## 63 கோரிக்கை

பீகார் மாநிலத்திலும் மின் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலைமையில் 63 கோரிக்கைகளை முன் வைத்து பீகார் மின வாரிய ஊழியர்கள் காலவரம்பற்ற வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்,

ஏழாவது நாளாக வேலை நிறுத்தம் நடந்த போதிலும் மின்விநியோகம தடைபடவில்லை யென்றும் நிலைமை சுமுகமாக இருப்பதாகவும் அரசுத் தரப்பில் அறிவிக்கப்பட்டது.

மின் விநியோகத்தைத் தடைப்படுத்த முயற்சிப்பவர்களை சுட்டுத்தள்ள அரசு உத்தரவிட்டிருப்பதாகவும் வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கும்படி அரசிடமிருந்து எந்தக்கோரிக்கையும் இதுவரை வரவில்லை யென்றும மின் வாரிய ஊழியர் சங்கத் தலைவர் நிருபர்களிடம் கூறினார்.

வறட்சி நிலையில் மின்சாரப் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கின்ற நிலையில் மின்சார ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்திருப்பதை பொதுமக்கள் ஆதரிக்கவில்லை. நெருக்கடியான நேரத்தில் வேலை நிறுத்தம் செய்வதை பத்திரிகைகளும் ஆதரிக்கவில்லை. ஒரு பிரிவு ஊழியர்களும் ஆதரிக்கவில்லை.

## பெரியவர் சங்கரய்யா 75-வது பிறந்தநாள்: முதல்வர் வாழ்த்து

சென்னை, ஏப். 15— பெரியவர் சங்கரய்யாவின் 75-வது பிறந்த தின விழா மிகவும் சிறப்பாக நடைபெற்றது. தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் மற்றும் அமைச்சர்கள் அவருக்கு வாழ்த்துச்செய்தி அனுப்பியிருந்தனர்.

கழகப்பொதுச்செயலாளர்ப உ.ச. பொருளாளர் மாதவன், வை. பெருமாள், நடிகமணி டி. வி. நாராயணசாமி, திருவை அண்ணாமலை என். வி. என். செல்வம், நாஞ்சில் மணிமாறன், அண்ணா பார்த்தசாரதி, சக்தி, காஞ்சி பன்னீர் செல்வம், கோவை சண்முக சுந்தரம், தலைமைக்கழக துரையரசன், தூயமணி, கவிஞர் மணிமொழி ஆகியோர்நேரில் சென்று வாழ்த்து தெரிவித்தனர். மற்றும் கழகத் தொண்டர்கள் நேரில் சென்று பெரியவர் சங்கரய்யாவிற்கு கதர் ஆடை அணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்,

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

நடக்க இருப்பதாக அவர் அறிவித்திருந்தார். 11-ந் தேதிமாலையில்தான் அவர் விடுதலை செய்யப்பட்டார். அரசு விழிப்புடனும் கண்காணிப்புடனும் உள்ளது.

## சட்டம் வரும்

சாதி சமய பிரச்சினைகளைத் தூண்டி விட்டு மோதல் ஏற்படும் வகையில்சுவரொட்டிஒட்டுபவர்களுக்குதண்டனைவழங்க சட்டம் கொண்டுவருவது என்று அரசு ஆலோசித்து வருகிறது. இதில் சட்டத்துறை பரிசீலித்து இதற்காக சட்டத்தைக் கொண்டு வரும்.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார், அமைச்சரின் விளக்கத்திற்குப் பிறகு ஒத்தி வைப்பு தீர்மானத்திற்கு அனுமதிமறுக்கப்பட்டது.

சட்டம் வருவதாக நாவலர் தகவல்:

## சாதிச்சண்டையை தூண்டும் சுவரொட்டி ஒட்டினால் தண்டனை

சென்னை, ஏப். 15- சாதி சமயபிரச்சினைகளைத்தூண்டி மோதல் ஏற்படக்கூடிய வகையில் சுவரொட்டி. ஒட்டுபவர்களுக்கு தண்டனை விதிப்பதற்கு சட்டம் கொண்டுவரப்படும் என்று நிதி அமைச்சர் நாவலர் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

சென்னை நகரில் கிறிஸ்துவர், முஸ்லிம் ஆகியோர் பெயரிலுள்ள சாலைகளின் பெயரை அழித்து வேறு ஒரு பெயர் எழுதப் போவதாக சுவரொட்டி ஒட்டப்பட்டு இருந்தது. இது குறித்து சட்டசபையில் எதிர்க்கட்சியினர் ஒத்தி வைப்புத் தீர்மானம் கொண்டு வந்தனர். அதற்கு நிதி அமைச்சர் நாவலர் பதிலளிததுக் கூறியதாவது:-

சென்னையிலுள்ள காயிதே மில்லத் சாலையின் பெயரை மீனாட்சி சாலை என்றும், கதீட்ரல் சாலை என்ற பெயரை டி. டி. கிருஷ்ணன் சாலை என்றும மாற்றி எழுதப் போவதாக "இந்து" ஒருவரின் பெயரால் சுவரொட்டி ஒட்டப்பட்டிருந்தது என்பது குறித்து உறுப்பினர்கள் கவலை தெரிவித்தனர். தமிழகம் நீண்டகாலமாக சமயத் துறைக்கு பெயர் பெற்ற இடம். சமய சம்பந்தமாக மாச்சரியங்கள், கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டாலோ அவற்றை மதிக்கக் கூடிய பண்பு பெற்றவர்கள்.

### அரசு முன் எச்சரிக்கை நடவடிக்கை

சாதி சமய பெயரால் வன்முறைகளை தூண்டிவிட்டால் அதனால் பாதிக்கப் படுபவர்கள் அப்பாவி மக்கள்.

இப்படி தூண்டி விடுபதை தடுக்க அரசு எல்லா முன் எச்சரிக்கை நடவடிக்கைகளையும் எடுக்கும். இது மதசார்பற்ற அரசு என்றாலும் அவரவர்மதநம்பிக்கைக்கு உட்பட்டு அவற்றைப் பின்பற்றத் தடை ஏதும் இல்லை.

ரோடுகளின் பெயரை மாற்றி எழுதப் போவதாக சுவரொட்டி ஒட்டப்பட்டுள்ளது. ஊர்வலம் போக போலீஸ் அனுமதியும் பெறவில்லை. கண்ணுதல் என்பவர் பெயரால அது ஒட்டப்பட்டுள்ளது. கடந்த 10-ந் தேதி அவர் கைது செய்யப்பட்டார். 11-ந தேதி போராட்டம்

(1-ம் பக்கம் பார்க்க)

## சிமெண்டில் கலப்படம்: இருவர் கைது

சென்னை, ஏப். 15— சிமெண்டில் கலப்படம் செய்து விற்றதாக இருவரை போலீசார் கைது செய்துள்ளனர். காசிமேட்டைச் சேர்ந்தவர் சஞ்சீவிதாஸ். (வயது 40) இவர் அப்பகுதியில் சிமெண்டில் கலப்படம் செய்து விற்பதாக போலீசாருக்கு தகவல் கிடைத்தது.

இதுகுறித்து காசிமேடு குற்றப்பிரிவு சப் இன்ஸ்பெக்டர் அந்தோணிதாசின் இடத்தை சோதனை செய்தார், அப்போது 24 மூட்டை கலப்பட சிமெண்ட இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. இதையொட்டி சஞ்சீவதாசையும், அந்த சிமெண்டை விற்பனை செய்த சிவகுமார் என்பவரையும் போலீசார் கைது செய்துள்ளனர்.



# தமிழ்நாடு புவியியல் மற்றும் சுரங்கத்துறை துவக்கம்.

## மாநில புவியியல் பிரிவின் வெள்ளி விழா





மாண்புமிகு நிதியமைச்சர்
இரா. நெடுஞ்செழியன்


மாண்புமிகு முதலமைச்சர்
எம். ஜி இராமச்சந்திரன்


மாண்புமிகு தொழிலமைச்சர்
எஸ். திருநாவுக்கரசு

"வெட்டுக் கனிகள் செய்து தங்கம் முதலாம்
வேறுபல பொருளும் குடைந்தெடுப்போம்."
—பாரதியார்



## புவியியல் மற்றும் சுரங்கத்துறை துவக்க விழா

அன்புடையீர்

1983-ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15-ம் நாள் (திருவள்ளுவர் ஆண்டு 2014 சித்திரைத் திங்கள் இரண்டாம் நாள்) வெள்ளிக்கிழமை மாலை 4-30 மணியளவில் சென்னை கிண்டி தொழிற்பேட்டையிலுள்ள மாநிலப் புவியியல் பிரிவின் வெள்ளி விழாவிற்கும் அத்துடன் புதிதாக ஏற்படுத்தவுள்ள புவியியல் மற்றும் சுரங்கவியல் துறையின் துவக்க விழாவிற்கும்

தமிழ்நாடு தொழில் அமைச்சர்
மாண்புமிகு திரு. எஸ். திருநாவுக்கரசு, பி.ஏ., பி.எல். அவர்கள்
தலைமை ஏற்க இசைந்துள்ளார்கள்

தமிழ்நாடு நிதி அமைச்சர்
மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ., அவர்கள்
துவக்கி வைக்கவும் இசைந்துள்ளார்கள்.

அவ்வமயம் தாங்கள் வருகை தந்து விழாவினைச் சிறப்பிக்க வேண்டுகிறேன்.

மு.அ.க. தய்யப்
செயலாளர், தொழில்துறை

### விழா நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| தமிழ் வாழ்த்து | : | |
| வரவேற்புரை | : | திரு. மு.அ.க. தய்யப், செயலாளர், தொழில்துறை |
| வாழ்த்து வழங்குவோர் | : | 1. திரு. எஸ். சிவசுப்பிரமணியன், தொழில் வணிக இயக்குநர் |
| | | 2. டாக்டர் திரு. எஸ். சரவணன், தலைவர் மற்றும் மேலாண் இயக்குநர் தமிழ்நாடு கனிம நிறுவனம் |
| | | 3. திரு. கே. ரங்கநாதன், இயக்குநர், இந்திய புவியியல் ஆய்வுத்துறை, தமிழ்நாடு பிரிவு |
| | | 4. திரு. ஜி.எல். தாண்டன், தலைவர், நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனம், |
| தலைமையுரை | : | மாண்புமிகு திரு. எஸ். திருநாவுக்கரசு, பி.ஏ., பி.எல். தமிழ்நாடு தொழில் அமைச்சர் |
| துவக்க உரை | : | மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ., தமிழ்நாடு நிதியமைச்சர் |
| நன்றியுரை | : | இயக்குநர், திரு. வி. கோபால், புவியியல் மற்றும் சுரங்கத்துறை. |
| நாட்டுப்பண் | : | |



## மாநிலப் புவியியல் பிரிவின் இருபத்தைந்தாண்டு காலப்பணிகள்!

தமிழ் நாட்டின் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான கனிமப் படிவங்களைக் கண்டு பிடித்து அவற்றைத் தோண்டி எடுத்துப் பயன்படுத்துவதை நோக்கமாகக் கொண்டுதான் தொழில் வணிக இயக்குநரின் கீழ் மாநிலப் புவியியல் வல்லுனரையும் அவருடன் ஒரு சில புவியியலாளர்களையும் கொண்டு 1957ம் ஆண்டில் மாநிலப் புவியியல் வல்லுநர் அலுவலகம் அமைக்கப்பட்டது. கடந்த இருபத்தைந்தாண்டுகளில் பல மதிப்பு மிக்க கனிமங்களின் இருப்பிடங்களைக் கண்டறிந்தும், அவற்றின் அளவினைக் கணக்கிட்டும் மாநிலப்புவியியல் பிரிவு இம்மாநில முன்னேறத்திற்கான தனது பங்கினைச் செலுத்தியுள்ளது. அக்கனிமங்களில் குறிப்பிடத்தக்கவை இரும்புத்தாது, சுண்ணாம்புக்கல், பாக்ஸைட், கிராபைட், ஜிப்ஸம், மாக்னஸைட், பெல்ஸ்பார், குவார்ட்ஸ், சீனாக் களிமண், சில்லிமனைட், ஆபரணக் கற்கள், சிலிகா மணல், இப்போது வெளிநாடுகளுக்கு பெருமளவில் ஏற்றுமதி செய்யப்படும்மதிப்புமிக்க அலங்காரக் கற்களான பெருமளவிலுள்ள கரும் பாறைப்படிவங்கள் ஆகியவைகளாகும். தமிழ்நாட்டிலுள்ள பல சிமெண்ட் தொழிற்சாலைகள், இரசாயனத் தொழிற்கூடங்கள், மேட்டூர் அலுமினியத் தொழிற்சாலை, இன்றுள்ள பல செராமிக்ஸ் மற்றும் ரிப்ராக்டரீஸ் தொழிற்சாலைகள், அனைத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சிக்கும் மாநிலப் புவியியல் பிரிவு கண்டு பிடித்த கனிமப் படிவங்களே காரணமாகும்.

தமிழ்நாட்டில் 1968ம் ஆண்டிலிருந்து 1975ம் ஆண்டுவரை செயலபட்ட கனிம வளர்ச்சித் திட்ட அமைப்பினை ஐக்கியநாடுகள் அபிவிருத்தித் திட்ட அமைப்பின் கூட்டுறவோடு தமிழ்நாடு அரசு ஏற்படுத்தியது.

தமிழ்நாடு அரசின் சார்பில் மாநிலப்புவியியல் பிரிவு இக்கூட்டுத்திட்ட அமைப்பில் சுறுசுறுப்போடு பங்கேற்று பணியாற்றியதோடு, வான ஊர்தி

வி. கோபால் இயக்குநர், புவியியல் மற்றும் சுரங்கத்துறை.

வாயிலான புவிஇயற்பியல் ஆய்வுகள் உள்ளிட்ட பல புதிய கனிம ஆய்வுத்தொழில் நுட்பங்களையும் முதன்முதலாய் இங்கு அறிமுகப் படுத்தவும் காரணமாய் அமைந்தது. ஐக்கிய நாடுகள் அபிவிருத்தித் திட்ட அமைப்பைச் சேர்ந்த பல்வேறு வெளிநாட்டு வல்லுநர்களோடு மாநிலப் புவியியல் பிரிவைச் சேர்ந்த தொழில் நுட்ப அலுவலர்களும் தோளோடு தோள் நின்று சேலம், வடஆற்காடு, தர்மபுரி, பெரியார் மாவட்டங்களின், பல பகுதிகளிலும் பணியாற்றி பல பயனுள்ள கனிமங்களைக் கண்டுபிடித்தனர்.

சுரங்கக் குத்தகைக்கான மனுக்களை ஆய்வு செய்ய தொழில் நுட்ப ஆலோசனை கூறி உதவுதற்கும், மாவட்டங்கள் அளவில் புவியியல் தொடர்பான அவசரப் பணிகளைச் செய்யவும் கடந்த சில ஆண்டுகளில் திருநெல்வேலி, மதுரை, திருச்சி, சேலம், கோவை கடலூர், காஞ்சீபுரம் ஆகிய 7 இடங்களில் இப்பிரிவின் மண்டல அலுவலகங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன, இவ்வலுவலகங்கள் ஏற்படுத்தப் பட்டதனால் கனிம நிர்வாகம் செம்மையாக்கப் பட்டுள்ளதுடன் கனிமங்கள் வாயிலான வருவாயும் அதிகரித்துள்ளது.

அறிவியல் மற்றும் தொழில் நுட்பம் சார்ந்த துறை என்ற வகையில் கடந்த இருபத்தைந்தாண்டு காலமாக இம்

(4.ம் பக்கம் பார்க்க

# கருணாநிதி ஆட்சியில் தானியம் வாங்கியதில் ரூ. நாலரை கோடி நட்டம்

**சென்னை, ஏப். 15- கருணாநிதி ஆட்சிக்காலத்தில், மற்ற மாநிலங்களில் இருந்து தானியங்களை வாங்கி விற்றதில் அரசுக்கு 452 லட்சம் ரூபாய் நட்டம் ஏற்பட்டுள்ளது.**

இந்தக்கொள் முதல் நடவடிக்கைகள் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும் என இந்திய தணிக்கைத் துறைத் தலைவரின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட இந்திய தணிக்கைத் துறைத் தலைவரின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

1974-ம் ஆண்டு வடகிழக்கு பருவ மழை தவறியதால் சோளம் கேழ்வரகு கம்பு மக்காசோளம் ஆகிய தான்யங்களை கொள் முதல் செய்ய உத்தரவிடப்பட்டது.

1975 பிப்ரவரி முதல் ஜூன் மாதம் வரை தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக்கழகம், மத்தியப் பிரதேசம், ஆந்திரப்பிரதேசம், மற்றும் கர்நாடகம் ஆகிய மாநிலங்களிலிருந்து 66 ஆயிரத்து 268 டன் தான்யம்கொள் முதல் செய்தது.

வாங்கப்பட்ட தான்யங்களுக்கு கூடுதல் விலை கொடுக்கப்பட்டதன் காரணமாக அடக்க விலைகள் அதிகமாக இருந்தது.

## ஆய்வு செய்தால்

கொள்முதல் செய்யப்பட்ட தான்யத்தில் 80 சதவிகிதம் சோளமாகும். இதன் மதிப்பு ரூ. 10.18 கோடியாகும்.

1975-ல் விற்பனையை மறு ஆய்வு செய்தபோது சோளம் முற்றிலும்விற்பனை ஆகாமல் இரண்டு மாதங்களாக கழகத்தின் இருப்பில் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

பொதுவாக சோளம் நான்கு மாதங்கள் வரையில்தான் கெடாமல் இருக்குமாதலால் அது இயற்கையிலேயே நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கக் கூடியதல்ல என்று கருதப்பட்டதால் அரசு அதன் விற்பனை விலையை மோட்டாரக அரிசியின் விலைக்கு இணையாக கிலோ ஒன்றுக்கு ரூ. 1.80 என்ற வீதத்தில் விற்க இக்கழகத்திற்கு (1975 ஏப்ரல்) அதிகாரம் அளித்தது. 1975 மே இறுதி வரையில் 225டன் சோளம் மட்டுமே பொது விநியோகத்தில் விற்கப்பட்டது. அதே நேரத்தில் மத்திய சேமிப்பிலிருந்து கோதுமையின் ஒதுக்கீட்டு அளவு அதிகரித்தது.

பொது விநியோகத்திற்கு கோதுமையும், அரிசியும் போதுமானதாக இருந்தது. கொள் முதல் செய்யப்பட்ட மோட்டாரகத் தானியங்களின் இருப்பு அதிகரித்து வந்ததன் காரணமாக, 1975 ஜூன் மாதத்திற்கு பின்னர் இக்கழகம மோட்டாரகத் தானியங்களை மேலும் கொள் முதல் செய்வதை நிறுத்தியது. கோதுமையின் விற்பனை விலைக்கு இணையாக சோளத்தின் விற்பனை விலையையும் இலோஒன்றுக்குரூ.1.40 ஆக குறைத்தது.

இருப்பு தானியங்களை விரைந்து விற்கும் பொருட்டு இக் கழகம் 1975 செப்டம்பரில் ஒப்பந்தப் புள்ளிகளைக் கோரியது! ஆனால் அதற்குப் போதிய வரவேற்பு இல்லை. 1975 அக்டோபர் மாதத்தில் விற்பனை குறித்து மறு ஆய்வு செய்கையில், கணிசமான அளவிற்கு சோளம் மற்றும் ஏனைய மோட்டாரகத் தானியங்களும் இருப்பில் இருந்தது.

## மோட்டாரக தானிய விலை குறைவு

இருப்பிலுள்ள சோளத்தை மிக விரைவாக விற்பனை செய்யும் பொருட்டு கழகம் 1975 அக்டோபர் மாதத்திலிருந்து சோளத்தின் விற்பனை விலையை கிலோ கிராம் ஒன்றுக்கு ரூ. 1 ஆக மேலும் குறைத்தது. இதேபோல் ஏனைய மோட்டாரகத் தானியங்களின் விலையையும் இக்கழகம் அவ்வப்போது குறைத்தது.

1975 அக்டோபர், நவம்பர் மாதங்களில் மக்காச் சோளத்திற்கு கிலோ ஒன்றுக்கு ரூ. 0.85 ஆகவும், கம்புக்கும், கேழ்வரகுக்கும் கிலோ ஒன்றுக்கு 1ரூபாய் ஆகவும் நிர்ணயித்து விற்பனை செய்தது.

கழகம் இருப்பிலுள்ள விற்காமலிருந்த தானியங்களை ஒருவகை செய்வதற்காக 1976 ஜூன் மாதத்தில் ஒப்பந்தப் புள்ளிகளைக் கோரியது ஆனால் இதற்குப்போதிய ஆதரவு கிட்டவில்லை இக்கழகம் இறுதியாக 1976 டிசம்பரில் மோட்டாரகத் தானியங்களை ஒருவகை செய்தது சோளத்தைக்கொள் முதல் செய்து விற்ற வகையில் இக்கழகத்திற்கு ரூ. 368.71இலட்சம் இழப்பு ஏற்பட்டது. கேழ்வரகு, கம்பு, மக்காச் சோளம் ஆகியவற்றை வாங்கி விற்ற வகையில் இக்கழகத்திற்கு ஏற்பட்ட இழப்பு முறையே ரூ. 24.53 இலட்சம் ரூ. 35.07 இலட்சம் ரூ. 24.18 இலட்சம் ஆகும்.

இக்கொள்முதல் நடவடிக்கைகள் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும் வருங்காலத்தில் இத்தகைய குறைபாடுகள் மீண்டும் நிகழாமல் இருக்க ஏதுவாக தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும் என்றும் அந்த அறிக்கையில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

## பெங்களூரில் புதிய கிளை திறப்பு விழா

சென்னை, ஏப். 15— ஸ்ரீராம்சிட்ஸ் இன்வெஸ்ட்மென்ட்ஸ் (பி) லிமிடெட் பெங்களூரில் தனது புதிய கிளையொன்றை வரும் 17ந் தேதி தொடங்குகின்றது.

கடந்த 10 ஆண்டுகளாக சிட்பண்ட் துறையில் ஈடுபட்டிருக்கும் ஸ்ரீராம் நிறுவனத்தார் புகார்களுக்கு இடமின்றி தங்கள் நிறுவனத்தை நடத்தி வருகின்றனர்.

புதிதாக தொழிற்சாலைகளுக்குத் தேவையான இயந்திரங்களைக் குத்தகை முறையில்வழங்கும் திட்டத்தையும் செயல்படுத்த உள்ளார்கள்.

## மாநிலப் புவியியல்...

(3-ம் பக்க தொடர்ச்சி)

மாநிலப் புவியியல் பிரிவானது ஏனைய அறிவியல் சார்ந்த நிறுவனங்களான இந்தியப் புவியியல் துறை, இந்தியச் சுரங்கக் குழுமம், எண்ணெய் மற்றும் இயற்கை வாயுக் குழு, நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனம், இந்திய விண்வெளி ஆய்வு நிறுவனம் போன்ற பல நிறுவனங்களுடன் தொடர்ந்த நல்லுறவைப் பெற்றிருப்பதுடன் இவை போன்ற அறிவியல் சார்ந்த நிறுவனங்களுடன் கூட்டுத் திட்டப் பணிகளையும் மேற்கொண்டு நடத்தி வருகிறது.

மாநிலப்புவியியல் பிரிவு கண்டறிந்து மெய்ப்பித்த பல்வேறுகனிமங்களையும் உடனடியாகப் பயன்படுத்தும் நோக்கத்தோடு தமிழ்நாடு கனிம நிறுவனம், தமிழ்நாடு சிமெண்ட்ஸ் நிறுவனம், தமிழ்நாடு செராமிக்ஸ் நிறுவனம், தமிழ்நாடு மாக்னஸைட்ஸ் நிறுவனம் போன்ற கனிம மேம்பாடு தொடர்பான அரசு நிறுவனங்கள் பலவற்றை தமிழ்நாடு அரசு அமைத்துள்ளது. இந்நிறுவனங்கள் இம்மாநிலத்திலுள்ள தொழில்சார் கனிமங்களைத் தோண்டியெடுத்துப் பயன்படுத்துவதில் முனைப்புடன் ஈடுபட்டுள்ளன. தமிழ்நாடு கனிம நிறுவனம், மதிப்புமிக்க கருமபாறைகளை குறிப்பாக ஜப்பானுக்கும், ஏனைய வெளிநாடுகளுக்கும் பெருமளவில் ஏற்றுமதி செய்யும் பொறுப்பினை ஏற்றுத் திறம்பட நடத்தி வருகிறது.

தற்போது மாக்னஸைட் கனிமப் படிவங்களை வெற்றிகரமாகத் தோண்டியெடுத்து வரும் தமிழ்நாடு மாகனஸைட் நிறுவனம் சேலம் பகுதியில் கிடைக்கும் தரம் குறைந்த மாகனஸைட் கனிமத்தையும் தர மேம்பாடு செய்து பயன்படுத்துவதற்கு ஏற்றதாக, கனிம மேம்பாட்டுத் தொழிற்கூடம் ஒன்றை அமைக்கவும் திட்டமிட்டுள்ளது. இதேபோல் தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள வெள்ளைக்களிமண்ணை தமிழ்நாடு செராமிக்ஸ் நிறுவனம் பீங்கான் பொருட்கள், சுகாதார மேம்பாட்டுப் பொருட்கள், மின்சாதனப் பீங்கான் பொருட்கள் மற்றும் பீங்கான் குழாய்கள் ஆகியவைகளைத் தயாரிக்கப் பயன்படுத்தி வருகிறது. இவ்வனைத்து நிறுவனங்களுமே தங்கள் வருங்கால திட்டங்களுக்கும் மாநிலப் புவியியல் பிரிவையே இப்போதும் நம்பியுள்ளன.

தமிழ்நாடு அரசு இம் மாநிலப் புவியியல் பிரிவை நிலை உயர்வு செய்து புவியியல் மற்றும் சுரங்கத்துறை என்ற தனித்துறையாக்கிட முடிவு செய்ததோடு கனிம ஆய்வுகளோடு மட்டுமல்லாமல் கனிம நிர்வாகம், உரிமை வரி நிர்ணயம் மற்றும் வசூலிப்பு, சுரங்கக் குத்தகை மனுக்களை ஆய்வு செய்து முறைப்படுத்துதல், சுரங்கங்களைப் பார்வையிடுதல் மற்றும் தமிழ் நாட்டில் கனிம முன்னேற்றம் தொடர்பான இதர எல்லாப் பணிகளையும் அத்துறையின் பொறுப்பில் விடவும் முடிவு செய்தது. இம்முடிவை நிறைவேற்றும் பொருட்டு, இப்புதிய புவியியல் மற்றும் சுரங்கத்துறை 1983-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15-ஆம் நாளன்று தொடங்கி வைக்கப்படுகிறது. மேற்கண்ட நோக்கங்களை நிறைவேற்ற இப்புதிய துறையின் கீழ் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு பகுதி அலுவலகத்தை ஏற்படுத்தவும் தீர்மானிக்கப் பட்டுள்ளது.










Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.

Editor: E. PARASURAMAN